# பவானி அஷ்டகம்

(ஸ்ரீ ஆதிசங்கரர் அருளியது)



சுவாமி பிரபஞ்சநாதன்

ஸ்ரீ குருப்யோ நமஹ

# பவானி அஷ்டகம்

**(ஸ்ரீ ஆதிசங்கரர் அருளியது)**



**விளக்கம்**

**சுவாமி பிரபஞ்சநாதன்**

# <u>பவானி அஷ்டகம்</u>

## (ஸ்ரீ ஆதிசங்கரர் அருளியது)

**न तातो न माता न बन्धुर्न दाता**
**न पुत्रो न पुत्री न भृत्यो न भर्ता ।**
**न जाया न विद्या न वृत्तिर्ममैव**
**गतिस्त्वं गतिस्त्वं त्वमेका भवानि ॥१॥**

ந தாதோ ந மாதா ந பந்துர் ந தாதா
ந புத்ரோ ந புத்ரீ ந ப்ருத்யோ ந பர்த்தா |
ந ஜாயா ந வித்யா ந வ்ருத்திர் மமைவ
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வமேகா பவானீ || (1)

**<u>விளக்கம்:-</u>**

தாய்தந்தை இல்லை; சுற்றம் நட்பில்லை;
பெண்பிள்ளை, பதியில்லை; மனையாளும் இல்லை;
அறிவு, தொழில் இல்லை; எதுவும் புகழ் இல்லை;
காப்பாய் பவானீ! என்றென்றும் புகழ் நீ. (1)

**भवाब्धावपारे महादुःखभीरु**
**पपात प्रकामी प्रलोभी प्रमत्तः ।**
**कुसंसारपाशप्रबद्धः सदाहं**
**गतिस्त्वं गतिस्त्वं त्वमेका भवानि ॥२॥**

பவாப்தாவபாரே மஹாதுக்க பீரு:
பபாத ப்ரகாமீ ப்ரலோபீ ப்ரமத்த |
குஸம்ஸாரபாசா ப்ரபத்த: ஸதாஹம்
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வமேகா பவானீ || (2)

**விளக்கம்:-**

கடலில் ஓர் துரும்பெனவே துயர் சூழ்ந்த கோழை;
காமமும் பாவமும் போதையும் பாதை;
ஆசை, பொறாமையால் கட்டுண்ட பேதை
காப்பாய் பவானீ! என்றென்றும் புகழ் நீ. (2)

**न जानामि दानं न च ध्यानयोगं**
**न जानामि तन्त्रं न च स्तोत्रमन्त्रम् ।**
**न जानामि पूजां न च न्यासयोगं**
**गतिस्त्वं गतिस्त्वं त्वमेका भवानि ॥३॥**

ந ஜானாமி தானம் ந ச த்யான யோகம்
ந ஜானாமி தந்த்ரம் ந ச ஸ்தோத்ரமந்த்ரம் |
ந ஜானாமி பூஜாம் ந ச ந்யாஸயோகம்
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வமேகா பவானீ || (3)

**விளக்கம்:-**

ஈகைவழி அறியேன்; தியானமும் அறியேன்;
தந்திரம் தோத்திரம் மந்திரமும் அறியேன்;
தொழுவதும் அறியேன்; யோகமும் அறியேன்.
காப்பாய் பவானீ! என்றென்றும் புகழ் நீ. (3)

**न जानामि पुण्यं न जानामि तीर्थं**
**न जानामि मुक्तिं लयं वा कदाचित् ।**
**न जानामि भक्तिं व्रतं वापि मातर्गतिस्त्वं**
**गतिस्त्वं गतिस्त्वं त्वमेका भवानि ॥४॥**

ந ஜானாமி புண்யம் ந ஜானாமி தீர்த்த
ந ஜானாமி முக்திம் லயம் வா கதாசித் |
ந ஜானாமி பக்திம் வ்ரதம் வாபி மாதர்கதிஸ்தவம்
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வமேகா பவானீ || (4)

**விளக்கம்:-**

புண்ணியம் பாவங்கள் தீர்த்தங்கள் அறியேன்
முக்தித் தலங்கள், உளம் ஒன்றல் அறியேன்
பக்தி மார்க்கங்கள் விரதங்கள் அறியேன்
காப்பாய் பவானீ! என்றென்றும் புகழ் நீ. (4)

**कुकर्मी कुसङ्गी कुबुद्धिः कुदासः**
**कुलाचारहीनः कदाचारलीनः ।**
**कुदृष्टिः कुवाक्यप्रबन्धः सदाहं**
**गतिस्त्वं गतिस्त्वं त्वमेका भवानि ॥५॥**

குகர்மீ குஸங்கீ குபுத்தி: குதாஸ:
குலாசாரஹீந: கதாசார லீன: |
குத்ருஷ்டி: குவாக்ய ப்ரபந்த: ஸதாஹம்
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வமேகா பவானீ || (5)

**விளக்கம்:-**

தீது என் செயல், சேர்க்கை எண்ணங்கள் யாவும்
தீது என் குலப்பாதை, நடத்தையும் தீதே
தீது என் நோக்கு, வாக்கு, எழுத்தெல்லாம்
காப்பாய் பவானீ! என்றென்றும் புகழ் நீ. (5)

**प्रजेशं रमेशं महेशं सुरेशं**
**दिनेशं निशीथेश्वरं वा कदाचित् ।**
**न जानामि चान्यत् सदाहं शरण्ये**
**गतिस्त्वं गतिस्त्वं त्वमेका भवानि ॥६॥**

ப்ரஜேசம் ரமேசம் மஹேசம் ஸுரேசம்
திநேஷம் நிஸிதேஸ்வரம் வா கதாசித் |
ந ஜானாமி சாந்யத் ஸதாஹம் சரண்யே
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வமேகா பவானீ || (6)

**விளக்கம்:-**

ஆக்குவோன் காப்போன் அழிப்போனை அறியேன்;
ஞாயிறும் திங்களும் வேறாரும் அறியேன்;
உன் பதங்களன்றியே அரண் வேறு அறியேன்.
காப்பாய் பவானீ! என்றென்றும் புகழ் நீ. (6)

**विवादे विषादे प्रमादे प्रवासे**
**जले चानले पर्वते शत्रुमध्ये ।**
**अरण्ये शरण्ये सदा मां प्रपाहि**
**गतिस्त्वं गतिस्त्वं त्वमेका भवानि ॥७॥**

விவாதே விஷாதே ப்ரமாதே ப்ரவாஸே
ஜலே சானலே பர்வதே சத்ருமத்யே |
அரண்யே சரண்யே ஸதா மாம் ப்ரபாஹி
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வமேகா பவானீ || (7)

**விளக்கம்:-**

சர்ச்சை, துயர், மதி மயக்கம், கண்டங்கள் நடுவே
நெடும் பயணம், நீர், நெருப்பு, காடு, மலை எதிலும்,
சூழும் பகை தாழும் வகை ஒருபோதுமின்றிக்
காப்பாய் பவானீ! என்றென்றும் புகழ் நீ. (7)

**अनाथो दरिद्रो जरारोगयुक्तो**
**महाक्षीणदीनः सदा जाड्यवक्त्रः ।**
**विपत्तौ प्रविष्टः प्रनष्टः सदाहं**
**गतिस्त्वं गतिस्त्वं त्वमेका भवानि ॥८॥**

அநாதோ தரித்ரோ ஜரோரோகயுக்தோ
மஹாக்ஷீணதீன: ஸதா ஜாட்யவக்த்ர: |
விபத்தௌ ப்ரவிஷ்ட: ப்ரணஷ்ட: ஸதாஹம்
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வமேகா பவானீ || (8)

## விளக்கம்:-

நாதியற்ற ஏழை; மூப்புற்ற ரோகி;
வலுவற்றுச் சோர்ந்தேன்; இழிநிலை சேர்ந்தேன்;
வினையுற்று வழியற்ற பெரும்பாவி என்னைக்
காப்பாய் பவானீ! என்றென்றும் புகழ் நீ. (8)

---

பவானி உன்னுடைய அடிமை நான் என்று பக்தன் துதிக்க ஆரம்பிக்கிறானாம். பவாநி த்வம், பவானி உன்னுடைய, (த்வம் என்றால் உன்) என்று இவன் சொல்லுகின்ற பொழுதே, அம்பாள் இவனுக்கு பாவானித்வம் என்கிற நிலையை அநுக்கிரஹித்து விடுகின்றாள் என்று சிலேடை பண்ணுகிறார்.

முதலில் இவன் பிரார்த்திக்கின்ற போது பவானி என்றால் அம்பாள் என்று வழிபட ஆரம்பிக்கிறானாம்.

பரமசிவனுக்கு முக்கியமான எட்டுப் பெயர்களில் ஒன்று பவன் என்பது. பவனின் பத்தினி பவானி.

மறுபடி, பவானித்துவம் என்ற இந்த இரண்டு வார்த்தைகளை இவன் சொன்ன மாத்திரத்தில், அம்பாள் பவானித்துவம் என்ற நிலையை அநுக்கிரஹம் செய்வாள் என்னும்போது, பவானி என்றால் ஆகிவிடுகின்றேன் என்று அர்த்தம்.

தீர்க்க சுமங்கலி பவ என்கின்றோமே, இங்கே பவ என்றால் ஆவாய் என்று அர்த்தம்.

பவானி என்றால் ஆகின்றேன். பவானித்வம் என்றால் நீயாகவே நான் ஆகிவிடுகின்றேன் என்று அர்த்தம்.

எல்லாம் பிரம்மம் என்ற அத்வைத ஞானம் உண்டாகி இப்படிச் சொல்கின்றான் பக்தன்.

தாஸனாக இருக்கப் பிராத்தித்தவனைத் தானாகவே ஆக்கிக்கொண்டு விடுகின்றாள் அம்பிகை என்பதை இங்கு அறிய வேண்டும்.

பவானி, உன் தாஸனாக என்னைத் துளி கடாக்ஷியம்மா என்று பிரார்த்திக்க ஆரம்பித்த பக்தன் மூன்றாவது வார்த்தையைச் சொல்லக்கூட அவகாசம் தராமல், பவானி உன் (பவானித்வம்) என்று அவன் சொல்லும்போதே அம்பாள் இடைமறித்து, ஆமாமப்பா பவானித்வம்தான் என்கிறாள்.

அதாவது நானும் நீயும் ஒன்றேதானப்பா என்கிற பரம ஞானத்தை வழங்கி விடுகின்றாள்.

பவானித்வம் என்றால் பவானியின் தன்மை என்றும் அர்த்தம்.

பக்தனே பவானித்வம் பெற்று பராசக்தியோடு தன்மயமாகி விடுகின்றான்.

இதுவே தன் மயமாதல்! அதுவே தன் சொரூபம்!

**ஓம் தத் சத்!**

